## Promise Yourself




- To be so strong that nothing can disturb your piece of mind
- To talk heath, happiness and prosperity to everyone you meet.
- To make all your friends feel that there is something in them.
- To look at the sunny side of everything and make your optimism come true.
- To think only of the best, to work only for the best, and to expect only the best.
- To be just as enthusiastic about the success of others as you are about you own.
- To forget the mistakes of the past and press on the greater achievements in the future.
- To war a cheerful countenance at all times and give every living creature you meet a smile.
- To give so much time to the improvement of yourself that you have no time to criticize others.
- To be too large for worry, too noble for anger, too strong for fear, and too happy to permit the presence of trouble.



*Published in a 1912 book titled – Your Forces and How to Use Them, by Christian Larson*



If you want to take your business to the top, there are certain habits that you should develop to take you there more efficiently than your competitors. Here are seven habits for surefire business success:




for Business Success

1. PLAN. The more thoroughly and detailed you plan your business activities in advance, the faster and easier it will be for you to carry them out. The general rule is that 20 percent of your planning time will save you 80 percents of the time later in achieving your business goals. Your plan should include setting specific targets for sales and profitability. Once you've set goals, you can then determine the people, administration, service people and facilities needed to achieve your goals.

2. ORGANIZE. Once you have a plan, you'll have to organize the people and resource needed to make it a success. Failure to thoroughly organize even on small detail in advance can lead to failure of the entire project.

3. HIRE THE RIGHT PEOPLE. The majority of your success will be determined by the quality of the people on your team. Take extra time to ensure you've hired the right people to help you to achieve your goals.

4. DLEGATE. Many business managers make the mistake of trying to do everything themselves. While you do want to maintain some control, a good leader must also be able to recognize when a job is too large for one person and to delegate some tasks to the right people. Trying to do it all yourself can lead to fatal mistakes. Instead, identify two or three things that you do that contribute the most to the company and then delegate the rest. This will allow you to fully develop your special skills and abilities.

5. SUPERVISE. Once you've delegated some tasks, you'll need to monitor the tasks, you are still responsible for the outcome of the tasks. Implementing a reporting system can help you to know the schedule and quality of the delegated task.

6. MEASURE PERFORMANCE. To achieve the goals you want, you should set specific, measurable standards, such as timelines, deadlines and quality. Those carrying out delegated tasks should know how their performance will be measured and when results are due. Scorecards can help both you and yore employee to monitor progress.

7. BE IN THE KNOW. One of the most important factors in the job satisfaction is said to be "being in the know". Your employees need to thoroughly understand what is going on around them in relation to their work. Regularly apprise staff at all levels of the status and situation of your company.

# தமிழ் சமூகத்தில் வன்முறையைத் தகர்க்க வழிசமைப்போம் கருத்தரங்கு நிகழ்வு







வசந்தம் தமிழ் முதியோர் உளவளத்துணை நிலையத்தினால் வழமையாக வருடாந்தம் நடாத்தப்படுகின்ற கருத்தரங்கின் வரிசையில் 5வது ஆண்டு கருத்தரங்கு ?தமிழ் சமூகத்தில் வன்முறையைத் தகர்க்க வழிசமைப்போம்? எனும் மையப்பொருளில் கடந்த நொவெம்பர் மாதம் 19ம் திகதி காலை 10மணி தொடக்கம் பிற்பகல் 3.30மணிவரை ஸ்காபரோ சிவிக் நிலையத்தில் நடைபெற்றது. 250 மேற்பட்ட எண்ணிக்கையினர் மிசாக்கா நோர்த்யோர்க் ஸ்காபரோ மார்க்கம் என பல பாகங்களில் இருந்தும் பெருந்தொகையானோர் கலந்து கொண்ட பெருநிகழ்வாக இது அமைந்தது.

வசந்தம் பாவுடன் ஆரம்பமாகிய கருத்தரங்கு வசந்தத்தின் ஆரம்ப கர்த்தாக்களில் ஒருவரும் கடந்தகால நிர்வாகசபைச்செயலாளரும் தற்போதைய செயற்றிட்ட உறுப்பினருமான கலாநிதி பார்வதி கந்தசாமி கருத்தரங்கிற்கு தலைமைதாங்கி சிறப்புற நடாத்தினார். வசந்தத்தின் தலைவர் ஏ பீ ஆர் டேவிட் வரேவேற்புரை நிகழ்த்தியதுடன் கருத்தரங்கின் நோக்கை விபரித்துக் கூறிய கருத்தரங்கின் தலைவி சபையில் சமூகந்தந்திருந்த சேவை வழங்குணர்களை ஒவ்வொருத்தராக சபையோர் பயன்பெறும் பொருட்டு அறிமுகம் செய்து வைத்தார்.அடுத்து வசந்தத்தின் சேவைகள் பற்றியும் செயற்றிட்டங்கள் பற்றியும் வசந்தத்தின் பணித்தொகுதியினர் விளக்கியதையடுத்து கருத்தரங்கின் கருப்பொருளை வலுவேற்றும் பொருட்டு ?வழியைக்காட்டுங்கள் - நான் தீர்மானிக்கின்றேன்? எனும் தலைப்பில் மூப்பியல் உளவியல் மருத்துவ செயற்திட்ட சிகிச்சை நிலைய இணைப்பாளர் மாகிறற் பிளவர், முதியவர்களின் உளத்தாக்கம் இனங்காணப்பட்டு சிகிச்சை அளிக்கப்படாது முதியவர்கள் மதுவுக்கு அடிமையாகும் துர்ப்பாக்கிய நிலைமைகள் பற்றி எடுத்துக்கூறினார். அவரைத்தொடர்ந்து வன்முறையாலும் போதைக்கு அடிமையாதலாலும் குடும்பத்தில் ஏற்படும் உளத்தாக்கம் எனும் விடயத்தில் சென்றிநெறி வைத்தியசாலை றூச் வலி சுகாதார முறைமை உளநல மருத்துவர்.வைத்திய கலாநிதி சு+ரியபாலன் இலகு தமிழில் உரையாற்றினார். அடுத்து நிகழ்வின் பிரதான பேருரையாக திரைவிலக்கல் - கனடாவில் குடிவரவுப் பெண்களின் அவலம் எனும் தலைப்பில் சிஸ்ரரிங் நிறுவன நிர்வாக இயக்குனர் அஞ்சலா றொபேட்சன் உரையாற்றினார். இவர் தனது உரையில் கனடாவில் நிலவும் இனவாதம் தொடர்பாகவும் குடிவரவுப்பெண்கள் பற்றிய தப்பபிப்பிராயம் பற்றியும் தப்பபிப்பிரயத்திற்கு எதிரான உண்மைகள் பற்றியும் குடிவரவும் பெண்கள் தொடர்பில் அரசு வகுக்கவேண்டிய சாதகமான கொள்கைகள் தொடர்பாகவும் வலியுறுத்தி பேசினார்.

பேருரையைத் தொடர்ந்து தகுந்த பெற்றாரியம் எனும் தலைப்பில் ரொறொன்ரோ சிறுவர் உதவிச் சங்க குழந்தை குடும்ப ஆலொசகர் நித்தியராஜ் செல்லப்பு உரையாற்றினார். சாதகமான பிள்ளை வளர்ப்பு அனுகுமுறைகள், பிள்ளைகளுடன் முரண்பாடுகள் மத்தியில் சாதகமான இசைவான உரையாடல் சொற்பிரயோகங்கள் பற்றியும் எடுத்துக் காட்டினார். அடுத்து இறுதி உரையாக அண்மையில் ரொறொன்ரோ தமிழ் சமூகத்தில் நாடாத்தப்பட்ட நெருங்கிய துணையினால் ஏற்படும் வன்முறைக்கான பிரதிபலிப்பும் அபிப்பிராயமும் எனும் ஆய்வில் வெளிக்கொணரப்பட்ட விடயங்கள் தொடர்பாக் தமிழ் சமூகத்தில் நெருங்கிய துணையினால் ஏற்படும் துன்பியல் வழமையை விலக்குதல் பற்றி கலாநிதி றொபின் மேசன் ஆய்வை ஆதாரம் காட்டி பேசினார். காலை அமர்வின் இறுதி நிகழ்வாக அணைத்துப் பிரதான பேச்சாளர்களையும் உள்ளடக்கிய கருத்தாடல் நிகழ்வு இடம் பெற்றது. சபையோர் பல வித கோணங்களில் தமது கேள்விகளை தொடுத்து சந்தேகங்களை தீர்த்து விரிவான விளக்கங்களைப் பெற்றுக்கொண்டனர். அத்துடன் சபையோர் இவ்வாறான நிகழ்வு தமிழ் சமூகத்தில் இன்னும் இன்னும் நடைபெற வேண்டும் என தமது ஆதங்கங்களையும் தெரிவித்துக்கொண்டனர்.

சபையோரை மகிழ்விற்கவும் சிந்திக்கவும் வைக்கும் வகையில் ?நாட்டிய கலைமணி? ூமதி மாலினி பரராஜசிங்கத்தின் மாணவர்கள் பொம்மை நாட்டியம் வழங்கினர். வசந்தத்தின் உபதலைவி வைத்திய கலாநிதி திலகவதி சந்துலால் நன்றியுரையாற்றிய பின் பங்குபற்றுனர்கள் மதிய உணவருந்தி மாலை அமர்விற்கு அமர்ந்தனர். இம்மாலை அமர்வானது ஒருவித கருத்துக்களமாகவும் பட்டறையாகவும் நடைமுறைப்பிரச்சினைகளுக்கான தீர்வுகளை கண்டறிவதாகவும் அமைந்ததுடன் மூன்று விடயங்கள் சமகாலத்தில் மூன்று வேறு மண்டபங்களில் நடைபெற்றது. வீட்டு வன்முறையும் முதியோர் துன்புறுத்தல் பற்றி சென் யோசவ் வைத்தியசாலை பெண்கள் சுகாதார நிலைய சமூக அபிவிருத்தி அலுவலர் சுதா குமாரசுவாமியும் கனடா தமிழீழச் சங்க குடும்ப உளவளத் துணையாளர் வண. பிதா. பிறான்சிஸ் சேவியர் அவர்களும் வளிப்படுத்தினார்கள்.

கருத்து ஒருமுனைப்படுத்தல் பாசறை யின் இரண்டாம் தலைப்பாக அமைந்த இளைஞர் வன்முறை தொடர்பாக மல்வேண் குடும்ப வள நிலைய முதியோர் செயற்திட்ட இணைப்பாளர் கிறிஸாந்தி சூ வளிப்படுத்தினார். சிறுவர் துன்புறுதல் களத்தை ரொரன்ரோ சிறுவர் உதவிச் சங்க குழந்தை குடும்ப சேவை ஆலொசகர் நித்தியராஜ் செல்லப்புவும் சென் ஜேம்ஸ் ரவுண் சுகாதார நிலைய கலாச்சாரம் பேண் ஆலொச-கரும் பதிவு செய்யப்பட்ட ஆரம்ப பராமரிப்பு தாதியுமாகிய சிவாஜினி ஜெகதீஸ் வரன் அவர்களும் வளிப்படுத்தினர்.

இறுதியில் பேச்சாளர்களையும், கருத்து ஒருமுனைப்படுத்தல் பாசறையை வளிப்படுத்தியவர்களையும் கௌரவித்து, தமிழ் சமூகத்தில் வன்முறையைத் தகர்க்க வேண்டிய தேவையை வலயுறுத்தியும், சபையோரின் ஒத்துழைப்பிற்கும் பிரசன்னத்திற்கும், கருத்தரங்கு நிகழ்விற்கு பக்கபலமாக பிண்ணியில் செயலாற்றிய அணைத்து தொண்டர்களுக்கும் நன்றி கூறி கருத்தரங்கு இனிதே நிறைவுற்றது.

நன்றி

'உன்னைப் பெத்த நேரம் ஒரு தென்னம் கன்றை நட்டிருக்கலாம்?

'எருமை மாட்டிற்கு பிறந்தது?

இப்படி பல 'பொன்மொழிகளை' நாம் எம் இளவயதிலிருந்து இன்றுவரை பெற்றோரிடம் கேட்டுக்கொண்டே இருக்கின்றோம்.

எனக்கு எப்பொழுதும் ஒரு கேள்வி தென்னம் கன்றுக்கும் எனக்கும், அல்லது என்னைவிட தென்னம் கன்று எவ்வகையில் உசத்தியென்று இன்றுவரை சரியான விடை கிடைக்கவில்லை.

ஆக மிஞ்சிப்போனால் தென்னம் கன்று வளர்ந்து காய் தரும், கிடுகு தரும், சின்னதாக நிழல் தரும். இவைகளை தாண்டிய ஒரு மனிதன் செய்ய முடிவதை தென்னம் கன்றால் செய்ய முடியுமா?

இவர்கள் என்னவோ தோமஸ் அல்வா எடிசன் மாதிரியும், ஆபிரகாம் லிங்கன் மாதிரியும் வாழ்வதாய் நினைப்பு. இவர்களுக்கு பிறந்த எம்மை அடி முட்டாள்களாக எப்பவும் ஒரு எண்ணம்.

பாணையில் இருந்தால்த்தான் அகப்பையில் வரும். உங்களுக்கு பிறந்த எங்களிடம் உங்களின் சக்தியையும் மீறி கனவு காண்பது எவ்வகையில் நியாயம்.

அத்தோடு எருமை மாட்டிற்கு பிறந்தது என்று வேறு. இதை ஆராய போனால், எருமை யார் என்ற கேள்வி வரும் என்பதால் விட்டுவிடுவோம்.

இன்றைய உலகம், எப்பொழுதும் கடந்ததை வைத்தே ஒரு மனிதனின் நிகழ்காலத்தை எடை போடுகிறது. அவன் இது செய்தான், அது செய்தான். அதைப்போல் நீயும் ஏன் செய்யக்கூடாது? என்ற உதாரணங்களிலேயே இளைய சமூகத்தை திருப்பி விடப் பார்க்கின்றது. புதிதாக இன்னொன்றை சாராத விடயங்களில் இளைய சமூகம் ஈடுபட்டால் சமூகத்துக்கு எதிரான விடயங்களால் அவைகளை அழித்துவிடப் பார்க்கின்றது.

எமது பெற்றோர் எம்மிடம் எதிர்பார்ப்பதில் தப்பில்லை. ஆனால் எமது எல்லைக்கு அப்பாற்பட்டு நிற்பதே அவர்கள் வழியாக போய்விட்டது. இதனால் தான், தகப்பன் பிள்ளைக்கு இடையில் ஏற்படும் விரிசல்கள் தொடர்கின்றன.

உன்னால் முடிந்ததை செய். என்று எத்தனை பெற்றோர் தங்கள் பிள்ளைகளிடம் சொல்லியிருக்கிறார்கள். எப்பொழுது பார்த்தாலும், பக்கத்தி வீட்டு பிள்ளைகளோடு ஒப்பிட்டு நம்மை தகுதியற்றவர்கள் ஆக்குவதே இவர்களின் செயல்களாக இருக்கின்றன.

எத்தனை பெற்றோர் தன் மகன்∴மகள் விரும்பிய கல்வியை முதன் முதலில் ஏற்றிருக்கிறார்கள். எப்பவும் தாம் நினைத்த முடிவெடுத்த கருத்துக்களை எம்மீது திணிக்கப்பார்க்கிறார்கள்.

இப்படியான பொற்றோர்களினால், எப்படி சுயசிந்தனை, செயல்படும் ஆற்றலும் கொண்ட இளைய சமூகம் உருவாக முடியும்.

சுதந்திரம் என்பது எல்லாவகையான உரிமை, உணர்வுகளுக்கும் பொருந்தும். இவைகளை எத்தனை பெற்றோர் தம் பிள்ளைகளுக்கு வழங்கியுள்ளார்கள்.

இப்படியான வாழ்க்கையிலிருந்து ஒருகின்ற இளைஞன் அரைகுறை மனிதனாகவே வளர்ந்து வருகின்றான். இதனால் இவனுக்கும் பிரயோசனம் இல்லை. இந்த சமூகத்துக்கும் இல்லை. உலகிற்கும் இல்லை.

இவன் இப்படி ஆனதற்கு யார் காரணம்? அவனா? அவளா?

சிறுவயதிலிருந்தே பொறுப்பை உணரவைத்தும், உரிமைகளை விட்டுக்கொடுத்தும் உணர்வுகளை மதித்தும் வளர்த்தால் இவர்களை பார்த்து உன்னைப் பெத்த நேரம் ஒரு தென்னம் கன்றை நட்டிருக்கலாம் என்று சொல்லத் தேவையில்லை.

சுவிச்சை சரியாகப் போடாமல் விளக்கு எரியவில்லையெண்டால் எப்படி??

## அறியாத தேவைகள்...

–அகில்

# Design companies are taking Indian fashion

Western culture is developing a grand love affair with the distinctive fashion style of that in India. Along with Indian music and spirituality, Indian Clothing is having a huge impact on the mainstream identities of western style and culture.

The latest designer shows from Armani, Fendi, and Miyake all draw on elements from the exotic Indian culture. In Paris Dries Van Noten, one of the new fashion leaders and member of the so-called Belgian Four presented a collection of layered chiffon wraps, dresses, saree, and kurta look-alikes. The color palette these western designers are drawing from is as vibrant as a Rajasthan desert at sundown, using rich golds, reds, and greens.

Indian designers like Sunita Shankar, Vandanna Roy, Ritu Beri, Monisha Jaising, Ravi Bajaj and Krishna Mehta are leading the way in redefining Indian fashion. Rohit Bal presented his latest collection; Sanskrit, at a New York benefit gala organized by Children's Hope, and stunned the audience with exquisite embroidery, beadwork, and tie-dye fashions with a decidedly Indian flair.

Many U.S. design companies are taking Indian fashion and transforming it for western audiences. Silk Threads in Dallas, TX is a premier provider of dresses based on Indian design.



Indian designers like Sunita Shankar, Vandanna Roy, Ritu Beri, Monisha Jaising, Ravi Bajaj and Krishna Mehta are leading the way in redefining Indian fashion. Rohit Bal presented his latest collection; Sanskrit, at a New York benefit gala organized by Children's Hope, and stunned the audience with exquisite embroidery, beadwork, and tie-dye fashions with a decidedly Indian flair.

Many U.S. design companies are taking Indian fashion and transforming it for western audiences. Silk Threads in Dallas, TX is a premier provider of dresses based on Indian design.



## Some tips on Salwar Kameez.

The kameez should be a little longer in height. It makes you look taller. If your height is around 5 feet 3 inches then your kameez height should be around 47- 48 inches.

If you have broad shoulders then avoid wearing puffed sleeves.

If you have fat arms and therefore cannot wear sleeveless then go in for sleeves of about 5 inches length. This will hide the flab on your arms and your hands will look thinner.

Salwar or shalwar can be worn in many styles. Styles keep changing with Trends. Recently big bottoms were in fashion and now short Kurtas Are back in vogue.
Chudidar looks good on long kameezs or Kurtas.

Avoid wearing them on short Kurtas. Chinese collar (closed neck) makes you look tall, but avoid it if you have broad shoulders.

Wear a shalwar around your naval area, as it will pull in your stomach. If you have the tie strings on your side, it reduces the look of the paunch.

Avoid Organza or any stiff cloth if you want to look slimmer.

Dark colours like maroon, red, blue or brown look very good on dark women.



Buying Sarees :

Women on heavier side should buy sarees (saris) in Georgette, Chiffon or Chignon. Heavy Mysore Silk sarees (saris) look beautiful and one tends to look slimmer.

Shorter women should buy sarees with small borders or no borders. They should definitely avoid big borders as big borders make one look shorter.

Thin women should buy Organza, Cotton, Tissue and Tussar Sarees. These Sarees (saris) gives a fuller effect.

In printed Sarees, avoid big prints, as it gives a gaudy and a huge look. Delicate print on a Saree, gives a delicate look.

Dark skin color women should generally buy dark colours like maroon, green, dark pink etc.

Few Tips on Draping a Saree :

In office Pinup your Saree, this looks smart and is manageable too.

For an outing or a function, just pinup the tip of the saree and let the rest fall on your hand. This gives a very graceful look. But of course the Saree should have a good fall.

Cotton, Tissue or any starched Sarees should be ironed properly and at the time of draping, the pleats should be done with your hands pressing and shaping it properly.

Put the pin on the back shoulder as this keeps the saree intact and does not show the pin too.

Don't wear a very flared petticoat inside.

Source: SEASONS INFOTECH Pvt. Ltd



# FOCUS ON THE LAW



## TITLE INSURANCE

Purchasers of real estate want to assure good title. They want to ensure that their interest in the property supersedes all other interests in the property (there are some standard exceptions). In the past, a lawyer will provide an opinion on title. The lawyer will perform certain standard searches and would advise the client on any problems associated with title.

Title insurance has gained prominence in the last ten years as an alternative method of assuring good title. It gained prominence in the United States much earlier than that. Title insurance is a legal contract. Title insurance does not cover everything; there are clauses that exclude coverage for certain things. A named individual will receive coverage, up to a certain amount, for a certain specific interest and property, where the loss results from certain specific cause or causes.

When a lawyer provides an opinion on title and there is an error, a claim can be made against the lawyer if the purchaser can prove that the error was caused as a result of the lawyer's negligence or that the error "fell within the scope of the lawyer's retainer." If the municipality provided erroneous information in response to a search request, then the lawyer's errors and omissions insurance will not cover that and the purchaser would be out of luck. With title insurance, coverage is provided for specified title risks without regard to the source of the loss; the error could be caused by the lawyer, the municipality or any other party.

There are three prominent title insurance companies serving the Canadian market: First Canadian Title, Stewart Title Guaranty Company and, the largest of them all, Chicago Title Insurance Company. They usually will "investigate title and evaluate the degree of risk before agreeing to provide coverage for a specific property and will exclude any risks which they are not prepared to cover." That which can't be revealed by public records will not receive coverage.

The marketability of title is usually insured in an owner's title insurance policy. Some things that are traditionally excluded in an owner's title insurance policy include: "events occurring subsequent to the date of the policy"; "claims of those in possession not shown by public records"; "survey related items"; "expropriation rights (unless revealed by registered title)"; "unrecorded construction liens", etc.

A lawyer will still have a role to play when title insurance is purchased as part of a real estate transaction. For example, a lawyer will have to make a determination as to which insurer to deal with. The lawyer will also have to review the policy to ensure the following: that the insured is named correctly; that the legal description of the property is correct and; that the exclusions are standard exclusions (if not, then the lawyer will have to ask the insurer to remove the exclusion or advise the client of the exclusion and ask the client whether the client still wants to continue with the purchase of the policy). Lawyers may also decide to advise the client that it would be best to resolve certain problems as opposed to having those problems covered by insurance. The purchaser should also be informed by the lawyer of the advisability of obtaining an up-to-date survey and also the amount of the policy coverage.

It should be noted that any knowledge that the insured has as to problems with title will be used by the insurance company as a "knowledge defence" and will further limit the coverage of the policy. Any knowledge that the lawyer has will be imputed to the client.

When purchasing real property, ask your lawyer about title insurance. It should be noted that not everything that is relevant about title insurance has been discussed in this article. Ask your lawyer about the exclusions included in the coverage, particularly ask if there are any property specific exclusions (that is, exclusions that are specific to the particular property that you are purchasing).

Much of what happens in our commercial society is about allocating risk. Lawyers allocate their risk by the retainer agreement and also by obtaining errors and omissions insurance. Insurance companies allocate their risk by the exclusions they place on the policy and also through a variety of other strategic methods. The seller gets to allocate his or her risk by the Agreement of Purchase and Sale and the hiring of a lawyer. As a purchaser, it is your responsibility, and your lawyer's responsibility, to ensure that all these people don't allocate their risk onto you. Title insurance is a way to reduce your risk, however, it should be remembered that not all your risk may be reduced. So get your lawyer to advise you on any risks you may be open to, even with title insurance.

[This article was written with the assistance of the following material: Sidney H. Troister, Kathleen A. Waters, Maurizio Romanin, Real Estate Reference materials – Chapter 19 – Title Insurance: An Overview (2004: The Law Society of Upper Canada, 47th Bar Admission Course). The quotes were directly from this chapter. This material is not available to the public; it is only available to lawyers and bar admission course students.]



SATHISHKUMAR BALASUNDERAM LLB, JD
You can reach Mr. Balasunderam at (905) 452 – 9659.

# சில மனிதர்களும் சில பேய்களும்

பிரபஞ்சன்



பேய் இருக்கிறதா, பேய் பிசாசுகள் இருப்பதாக நம்புகிறீர்களா? என்று புதுமைப்பித்தனிடம் யாரோ கேட்டார்களாம். அதற்கு அவர், "பேய் இருக்கிறதோ இல்லையோ, அது பற்றிய பயம் இருக்கிறது" என்றாராம். எனக்கும் சின்ன வயசில் பேய் பிசாசுகள் பயம் இருந்தது. இப்போது இல்லை. எனக்கு மனிதர்கள் மேல்தான் பயம். இப்போதெல்லாம்.

இரண்டு விஷயங்கள் பற்றிப் பேச எல்லோரிடமும் ஏதேனும் இருக்கின்றது. ஒன்று பேய், மற்றது பாம்பு. ஏதோ ஒரு வகையில் மனிதகுலம் பேயோடு கட்டப்பட்டிருக்கிறது. பேய் ஒவ்வொருவர் வாழ்விலும் ஒருமுறையாவது வந்து போகிறது. ஒவ்வொரு மனிதரும் தம் மூளையின் ஒரு பெட்டியில் ரகசியமாகப் பேயைப் போட்டுப் பராமரிக்கின்றார். பேய் இருக்க வேண்டும என்று நம்புகிறார். பேய் இருந்தால்தான் "பயம்" என்ற ஒன்று இருக்கும் என்று நினைக்கிறார். பேய்க்குப் பயப்படுதல் மனிதர்கள் உள்ளூற நம்புகிற உயிர் ஆசைகளில் ஒன்று. பேயை ஓட்டுவதற்கென்றே உடுக்கை, பம்பை போன்ற வாத்தியங்களை வைத்துக் கொண்டு சில பேர் காத்திருக்கிறார்கள். ஆகவே, பேய் இருக்கத்தானே வேண்டும்.

பேயின் வசிப்பிடம் யாது?

என் பாட்டிக்கு அது தெரியும். மரங்களின் உச்சிகளில்தான் பேய்கள் வாழ்கின்றன என்பாள் அவள். விளக்கு வைத்த பிறகு மரத்தின் உச்சியைப் பார்த்து என் பாட்டி சம்பாஷணை நடத்தியதை நானே கேட்டிருக்கின்றேன். பேய்களுக்குத் தமிழ் தெரிந்திருக்கிறது. தமிழ்ப் பேய்கள் போலும்! எங்கள் தோட்டத்து மரங்களுக்குச் சமஸ்கிரதப் பேய்கள் வந்ததில்லை. பேய்களில் ஆண், பெண், அரவாணிப் பேய்கள் உண்டா என்பதில் சந்தேகங்கள் இருக்கவே செய்கின்றன. முப்பால் பேய்களும் இருக்கத்தான் வேண்டும். பேய்களின் பாலியல் சமாச்சாரங்கள் மர்மமாகவே இருக்கின்றன. காரணம், பேயினம் பத்திரிகை நடத்துவதில்லை. பேய்களில், நாலு வேதம், ஆறு சாஸ்திரம், பதினெட்டு புராணம், அறுபத்தாறு கலைக்யானங்கள் கொண்டவை இருப்பதாகக் கதைகள் உலவுகின்றன. படித்த வர்க்கப் பேய்கள் போலும்!

பேய்களுக்கு இளம் பெண்கள் மேல் மோகம் அதிகம். இளம் பெண்களை நாடியே அவைகள் அடைகின்றன. வயசு வந்த பெண்கள் மாலை நேரங்களில் அத்துவானக் காட்டில் அலைவது தடுக்கப்பட்டிருக்கிறது. தோழிகளிடம் யாராவது ஒருத்தி "சரிடி: நாளை விடியறதுக்கு முன்னமே வந்து கதவைத் தட்டுவேன். குடத்தை எடுத்துக்கிட்டு வந்துடு" என்று சத்தமாகச் சொல்லி விடை பெறக்கூடாது. பக்கத்து மரப்பேய் இதைக் கேட்டுக் கொண்டே இருக்கும். விடியலில் அல்ல. நள்ளிரவில் வந்து கதவைத்தட்டியபடி, விடிந்து விட்டதாகச் சொல்லி அழைத்துப் போவது. பேயாகத்தான் இருக்கும். பெண், பையன், விவசாயி என்று எந்த உருவத்தையும் எடுக்கும் சக்தி, பேய்களுக்கு உண்டு.

இப்படித்தான் சீதாலட்சுமியை அழைத்துப் போயிற்று ஒரு பேய் கனகம்மாள் புதுசாகக் கொலுசு போட்டிருப்பவள். 'ஜல் ஜல்' என்று அது சப்தம் எழுப்பும். பேய் கொலுசு அணிய மறந்துவிட்டது. "எங்கடி, கொலுசைக் காணோம்" என்று காலைப் பார்த்திருக்கிறாள் சீதாலட்சுமி. பேய்க்குக் கால் இல்லை. கண்டுபிடித்துவிட்டாள். "ஐயோ, அம்மாடி" என்று அலறிக்கொண்டு வீடு வந்தவள் தான்: எழுந்து நடமாட ஆறு மாதமாயிற்றாம். தமிழில் இது மாதிரி ஆயிரம் கதைகள்.

பனை மரத்தின் கீழே நின்று "சரி ராமசாமி விடியலுக்கு முன்னாடி வந்துரு ஏத்தம் இறைச்சி தண்ணி பாய்ச்சுவோம்" என்றிருக்கிறான் கந்தன். பனை மரத்துப் பேய், இதைக் கேட்டுக் கொண்டே இருந்தது. 'வாரே வா' என்றபடி கந்தனை இருட்டிலே கிளப்பி நிலத்துக்கு அழைத்துப் போய் விட்டது. பேய் ஏற்றம் இறைக்க கந்தன் வாய்க்கால் வரப்பெடுத்துக் கொண்டிருக்கிறான். ஏற்றமான ஏற்றம்: வெள்ளம் வருவது மாதிரி பொங்கிக்கொண்டு வந்தது வாய்க்கால் தண்ணீர். கந்தனுக்குப் புரிந்துவிட்டது. வந்தது பேயார் என்று. தலைப்பாகையை எடுத்து பக்கத்துச் செடியின் தலைமேல் வைத்து, ஆள் இருக்கிற பாவனையை ஏற்படுத்தி விட்டு. விட்டான் வீட்டுக்கு ஓட்டம், பேயா, கொக்கா? அதுவும் "கந்தா கந்தா" என்று கூப்பிட்டுக்கொண்டே பின் தொடர்ந்தது கதவைச் சாத்தினான் கந்தன். பேயின் கை கதவில் மாட்டிக் கொண்டது. மணிக்கட்டு வரைக்கும் பேயின் கை, கதவுக்கு உள்ளே. கந்தன் எப்படியோ ஒரு கத்தியை எடுத்து முன்னையை வெட்டிவிட்டான். விடிந்து பார்த்தால் ஒரு குரங்கின் கை போல முசு முசு என்று முண்டிய மயிர்த் திரளோடு இருந்ததாம் பேயின் கை.

இப்படி நூறு கதைகள் இருக்கின்றன. தமிழில்.



‘இயற்கை இகந்த கதைகள்’ என்ற பெயரில் பேராசிரியர் பா. வசந்தகுமார் ஒரு புத்தகம் எழுதி இருக்கிறார். காரைக்காலில் (தமிழ்நாடு) பிரஞ்ச் ஆசிரியராக இருந்தவர் அவர். பிரஞ்ச் பேரெழுத்தாளர் மாப்பசான் கதையொன்றையும், நம். ஜி. நாகராஜன் கதையொன்றையும் ஒப்பிட்டு எழுதி இருக்கிறார். சுவராஸ்யமாக இருக்கிறது. ‘சூப்பர் நேச்சுரல்’ என்பதுக்கான தமிழ்ச்சொல்தான் ‘இயற்கை இகந்த’ என்பது.

தொதரோவ் எனும் பிரஞ்ச் அமைப்பியலாளர். இயற்கை இகந்த கதைகளுக்கு விளக்கம் தந்திருக்கிறார். ஒரு மனிதர் வாழும் இயற்கைக்கு – உலக நடைமுறைக்கு – மாறாக ஒரு தடுமாற்றம் ஏற்பட்டு அந்தத் தடுமாற்றத்துக்கு காரணம் அறிய முடியாமல் தவிக்கும் நிலையே இயற்கை இகந்த நிகழ்ச்சி. இந்த வகைக் கதைகளைப் படிக்கும் வாசகரும், நிகழ்ச்சியை வாழும் கதாபாத்திரமும் ஒரே விதமான தடுமாற்றத்துக்கு சிறிது நேரம் ஆட்பட்டு, நடக்கும் நிகழ்ச்சி உண்மையா, பொய்யா என்று முடிவெடுக்க வேண்டியவர்களாக இருப்பார்கள். வாசகரை எந்தவித விளக்கமும் கொடுக்க முடியாத நிலைக்கு அழைத்துச் செல்ல வேண்டும்.

நம் தமிழ் மரபுக் கதைகள், இது போன்ற நிகழ்ச்சிகளை பில்லி, சூன்யம், குட்டிச்சாத்தான், ஏவல், செய்வினை என்று வர்ணிக்கின்றன. ஐரோப்பிய இலக்கியத்தில், ஜெர்மன் ஆசிரியர் ஆப்மன் (holfmann) அந்த வகைக் கதைகளின் பிதாமகர் என்கிறார்கள். மாப்பசான், அந்த மரபினர்தான் மாப்பசானுக்கு முன்னாலேயே தமிழ் வாசகர்கள் நன்கறிந்த பால்சாக்கும் இந்த வகை முயற்சியை மேற்கொண்டிருக்கிறார்.

மாப்பசானின் கதை : Apparition ‘தோற்றம்’ எனலாம். சாமுவெல் தன் கதையைத் தொடங்குகிறார். 55 ஆண்டுகளுக்கு முன் நடந்த கதை அப்போது நான் ருவான் நகரில் ராணுவ அதிகாரியாக இருந்தேன். ஒரு மாலை தோட்டத்தில் உலவும் போது ஒருவர் அறிமுகம் ஆனார். என் பழைய நண்பர் என்று உரிமை பூண்டார். தன் கதையை என்னிடம் சொன்னார். அவர் ஒரு பெண்ணை அதிகம் நேசித்தார் திருமணம் செய்து கொண்டார். ஒரு வருடம் இன்பமாகப் போயிற்று. மனைவி இருதய நோயால் இறந்து விட்டார் வாழ்க்கை கசந்தது. சவ அடக்கத்துக்குப் பிறகு வாழ்ந்த கோட்டையைத் துறந்து, வாடகை அறையில் குடி இருக்கிறார். மீண்டும் அந்த வீட்டுக்குள் அடி எடுத்து வைப்பதில்லை என்று சபதம் செய்திருக்கிறார். அவர் அந்தக் கோட்டைக்குள் இருக்கும் அவர் அறையில் மூன்று குறிப்பேடுகள் இருக்கின்றன. அவைகளைக் கொண்டு வரச்சொல்லிக் கேட்டுக் கொள்கிறார். சாவியும் வேலைக்காரனுக்குக் கடிதமும் தருகிறார். அதிகாரியும் அக் கோட்டைக்குள் செல்கிறார். அந்த அறையைத் திறந்து குறிப்பேட்டைத் தேடுகிறார். அவர் கழுத்தில் யாரோ விடும் மூச்சு படுகிறது. அச்சத்தால் அவர் நடுங்குகிறார். திரும்பிப் பார்க்கிறார். நண்பரின் காலமானதாகச் சொன்ன மனைவி! வெள்ளை ஆடையில் இருக்கிறாள். ஒரு சீப்பை அவர் கையில் தந்து தன் தலையை வாரச் சொல்கிறாள். இவரும் செய்கிறார். அவள் கூந்தல், தரையைத் தொடுகிறது. திடுமென அவள் சீப்பை பிடுங்கிக் கொண்டு ஓடி மறைகிறாள். அவளை மீண்டும் காண அவர் செய்யும் முயற்சி பலிக்கவில்லை. நண்பர் கேட்ட குறிப்பேடுகளை வேலைக்காரன் மூலம் அவரிடம் சேர்க்கிறார். மீண்டும் நண்பரையும் அவர் சந்திக்கவே முடியவில்லை. அவர் கோட் பட்டனில் அப்பெண்ணின் தலைமுடி சுற்றி இருக்கிறது.

வாசகர்களை ஒரு மாய லோகத்தில் வைத்து அந்தப் பெண்ணும் நண்பரும் உண்மை மனிதர்கள் தானா என்கிற தடுமாற்றத்தை உருவாக்குவதில் மாப்பசான் வெற்றி பெற்றிருக்கிறார். ஒரு அமானுடத் தன்மையை ஏற்படுத்தியது இக்கதை. தமிழில் இதற்குச் சமமாகப் புத்தக ஆசிரியரால் கொடுக்கப்பட கதை, உண்மையில் சிறந்தது மட்டும் அல்லாமல் மாப்பசானின் கதையைக் காட்டிலும் மேலானது. நாம் பெருமைப்படத்தக்க விஷயம் இது. ஜி. நாகராஜனின் டெர்லின் ஷர்ட்டும் எட்டு முழ வேட்டியும் அணிந்த மனிதர்’ என்பது அக்கதை.

‘போலீஸ் ரெய்டு’ இருக்கலாம் என்று தகவல் வந்ததால் கதவைத் திறந்து வைத்துக்கொண்டு வீட்டு வாசலில் நிற்க வேண்டாம் என்று காமத்தரகன் (மாமா) சொல்லி இருந்தான். வெளிக்கதவை அடைத்துவிட்டு, மெத்தையில் அமர்ந்திருந்த தேவயானைக்கு அலுப்புத் தட்டியது. ரேழியிலிருந்து, படிக்கட்டுகளின் வழியாக மாடியறைக்குச் சென்று விளக்கைப் போட்டாள். இரட்டை மெத்தை ஒன்று சுவரோரமாகக் கிடந்தது. ‘நைட் புக்கிங்’ குக்கு மட்டுமே பயன்படுத்தப்பட்டு வந்த அந்த அறை. ஒரு மாத காலமாகப் பயன்படுத்தப்படாமல் இருந்தது. தேவயானை கட்டிலின் மெத்தையைப் புரட்டி அதன் அடியிலிருந்து ஒரு நீளமான அரை இஞ்சு மணிக்கயிற்றை எடுத்தாள். அவள் ஊரிலிருந்து வரும்போது அவளது தாயார் அவளது படுக்கையைக் கட்டுவதற்குப் பயன்படுத்திய கயிறு அது. உத்தரத்தில் ஒரு இரும்பு வளையம் தொங்கிக் கொண்டிருந்தது. கட்டிலின் மேல் நின்று கொண்டு, கயிற்றை அந்த வளையத்துக்குள் செலுத்திச் சுருக்கு போட முயற்சித்தாள். பல முயற்சிகளுக்குப் பிறகு, கயிறு வளையத்துக்குள் சென்றது. முடிச்சுப் போட்ட அதே கணம் கதவு தட்டப்படும் சப்தம் இறங்கி வந்து கதவைத் திறந்தாள்.

மாமாவும் டெர்லின் ஷர்ட்டும் எட்டு முழ வேட்டியும் அணிந்த மனிதர் ஒருவரும் நின்றிருந்தார்கள். அவரை இருக்கச் சொல்லி விட்டு, மாமா விடை பெற்றான். அவர் சற்று நேரம் பேசிக்கொண்டு இருந்துவிட்டு ஐந்து ரூபாய் கொடுத்துவிட்டுச் செல்கிறார். இரவு மூன்று மணிக்கு மாமா வருகிறான். "அவர் எனக்கு ஐந்து ரூபாய் கொடுத்தார்" என்கிறாள் தேவயானை.

"யாரவன்?"

"அதான். நீங்க முதல்லே கூட்டியாந்தீங்களே. அவர்தான்"

"நான் இன்னிக்கு ஒரு வாட்டிதானே வந்தேன்"

"ஏழரை மணிக்குக் கூட்டியாந்தீங்களே. ஞாபகமில்லையா?"

"நான் சுப்பு வீட்டிலேந்து கிளம்பும் போதே ஒன்பது மணி இருக்குமே".

மாமா அந்த நபரைக் கூட்டி வரவில்லை. ஆனால், மனிதர் வந்திருந்தார். தலையணைக்குக் கீழே அவள் வைத்த அந்த அஞ்சு ரூபாய் நோட்டையும் காணவில்லை. வெளிச்சத்தில் அவள் போட்ட சுருக்கு மட்டும் அவளைத் திகைக்க வைத்தது.

கதைச் சுருக்கம் இது. கதையாகாது. கதையை முழுமையாகப் படித்தால் மட்டுமே கதையின் பெருமை விளங்கும். மாப்பசானின் கதையில் அமானுஷ்யம் இருந்தது. ஆனால் நாகராஜன் கதையிலோ அனைத்துக்கும் மேலான ஒரு கடுமையான ஒரு வாழ்க்கை நடக்கிறது. வாழ்க்கையின் ஊடாக சில நிகழ்ச்சிகள் நடக்கின்றன. அந்த 'டெர்லின் ஷாட்' அணிந்த மனிதர் உண்மையிலேயே வந்தவர்தானா அல்லது தேவயானையின் மனப்பிரம்மையா? எதுவும் இருக்கலாம். அந்த மனிதர் கொடுத்த ஐந்து ரூபாய் பிரம்மையாகவும் இருக்கலாம் தொலைந்தும் போயிருக்கலாம் ஆக மொத்தத்தில் நாகராஜனின் தேவயானை பிழைத்துப் போகிறாள். நாகராஜனின் உலகத்தில் தூக்கு இல்லை. சுயவதை இல்லை.

பேய்த்தன்மைக்கும் அமானுஷ்யத்துக்கும் வித்தியாசம் உண்டு. பேய்ச்சங்கதிகள் கற்பிதமான உலகு சார்ந்த தெளிவான நடவடிக்கைகள் அமானுடம் புரிபடாத தெளிவற்ற புகைப்படலங்கள் இரண்டிலும் இலக்கியங்கள் சாத்தியமாகி இருக்கின்றன. கலிங்கத்துப் பரணி என்ற ஜெயங்கொண்டார் எழுதிய பழந்தமிழ் இலக்கியத்தை இலக்கிய ரசிகர்கள் கட்டாயம் படிக்க வேண்டும். கற்பனைகளின் உச்சம் அது போர்க்களத்துப் பேய்கள் செத்து விழுந்த வீரர்களின் உடல் உறுப்புகளைத் திரட்டிக் குழம்பு வைப்பதும், பசி தாளாமல் அவசரமாகக் குழம்பில் கைவிட்டுக் கையைப் பொசுக்கிக் கொள்கிற வர்ணனைகள். உலக இலக்கியத்தின் சிறந்த பகுதிகள்.

சிவபெருமானே 'அம்மா' என்று அழைத்த பெருமைக்குரிய கவி, காரைக்கால் அம்மையார். இறைவனிடம் இருந்து பேய் உருவத்தை வேண்டிப் பெற்றவர்: பேயாக உழன்றவர்.

தமிழ் இலக்கியப் பேய்களின் நடனம் தனியாக எழுதப்பட வேண்டியவை. ஒரு பேயோட்டிக்கும் முனீஸ்வரனுக்கும் சினேகம். முனி ரெம்ப நாளாகப் பட்டினி கிடந்து இளைத்துப் போயிருக்கிறது. அது தன் கஷ்டடத்தைப் பேயோட்டிக்குச் சொல்கிறது. "எல்லா இடத்திலும் கரண்ட் விளக்கு வந்து வெளிச்சம் ஏற்பட்டு விட்டதால் பேய்கள் மேல் மக்களுக்கு மரியாதை இல்லாமல் போய்விட்டது". பேயோட்டி. "பயல்கள் இங்கிலீஷ் படித்துவிட்டுப் பேய் இல்லை. பிசாசு இல்லை என்கிறார்கள்". என்று தம் வருத்தத்தைப் பகிர்ந்து கொள்கிறான். இருவருக்கும் ஒரு உடன்பாட்டைச் செய்து கொள்கிறார்கள். டீக்கடைக்காரன் பெண்ணை பேய் பிடித்துக் கொள்வது. கோழி, சாராயம், பணம் பெற்றுக்கொண்டு பேயோட்டி பேய் விரட்டுவது: காசு பணத்தைப் பேயோட்டி வைத்துக் கொள்வது, சாராயம் கோழியை முனிக்குக் கொடுத்து விடுவது என்பது பேச்சு. சொன்னபடி, பேய் பெண்ணையும் பிடித்து விட்டும் விடுகிறது. மனிதன் சொன்னது போல், சாராயம் கோழியுடன் வருவான் என்று இரவு முழுக்கக் காத்திருக்கிறது. மனிதன் தட்சணையுடன் சாராயம் கோழியுடன் தன் வைப்பாட்டி வீட்டுக்குப் போகிறான். இது நான் எழுதிய 'அமானுடர்' என்னும் கதை.

புதுமைப்பித்தனின் பேயையும் சந்திப்போம்....

Continuing next issue

# Mother Theresa tamil youth commemorated Maveerar Naal

Nov 17





The saying of "youth are the leaders of tomorrow" is a statement that is true, but in it lies a small error because the students of Mother Theresa Catholic School have proved that youth are the leaders of today.

The Tamil students who attend Mother Theresa, a high school located in Malvern are mostly a generation of kids who were born and raised in Canada. One would think that these youth would not be aware or interested in their cultural background, however these students feel the obligation and responsibility to carry on their culture and history in Canada. Maveerar Naal is a remembrance day to commemorate the Tamil soldiers in Sri Lanka who have fought and lost their lives to a civil war that had been going on for almost twenty years. November 27, is the day to commemorate these soldiers and the students of Mother Theresa would not let this day go unnoticed.

With a strong connection to their history and culture the students at Mother Theresa planned to organize a day to host Maveerar Naal, a day consisting of speeches relating to the background of the war while explaining the concept of Maveerar Naal, and most importantly respecting those who sacrificed their lives to create a better life for the generations after them. The students took the initiative and planned the agenda and recruited volunteers to help with the event. A problem the students faced was that the school was hesitant to allow the event to take place in school. Through meetings and persistent persuasion the students, who are formally part of the schools Tamil Student Association, TSA, successfully convinced the school to allow Maveerar Naal to take place.

The event was successful with approximately 300 students showing up to the event. Students that were Tamil and even students from other backgrounds showed up and had been educated that day about Maveerar Naal. This event educated many people about Maveerar Naal, and this education shows that students are enabling themselves to educate themselves and others about important events that involve their cultural roots and background.

Being a teenager born and raised in Canada comes with many difficulties, primarily the two cultures that the teenager has to lead. The conception of these youth being so absorbed with the western culture undoubtedly was proven wrong by the students at Mother Theresa. These students clearly knew that their history and background was very important and it was them who stepped up to the plate and decided that Maveerar Naal had to take place no matter what. Through admirable determination and hard-work they were able to hold the event at their school, and this truly proves that youth are the leaders of today, tomorrow and forever to come.

BY: Ruksha Jeyakanthan
student lester B pearson



The buzz in Kollywood is that director Hari, soon after completing his Aaru starring Suriya, might do a movie with Vijay as hero. Hari, a one-time associate of Balachander and Saran, made his entry in Kollywood with Thamizh and followed it up with movies like Samy, Kovil, Ayya and Arul. Currently the director is busy wielding the megaphone for Aaru produced by Saran which stars Suriya and Trisha. Grapevine has it that Hari has narrated an action story to Vijay recently and the latter was impressed with it very much that he has given a go ahead early next year, which means his Puli to be directed by S J Suryah might be postponed.



She has a striking figure and beautiful face to go with it. Yet, Pooja is still to strike it rich here. Pooja is, however, hopeful of establishing her presence soon. The actress has got a couple of releases in the coming weeks opposite Madhavan and Prashanth respectively. Pooja says, 'Both my movies Thambi and Thagappansamy have come good. I play a matured and a homely role in both. It is a challenge to do a role with less glamour but more scope to perform.' Pooja will be doing two more movies in Tamil besides one in Telugu, she says. Pooja was recently at the Children's Hospital to spend a day with cancer affected children. 'Ever since my childhood I have been visiting such places and spend some time with these children only to keep them happy', she adds. Pooja, who started as a model co-ordinator, enter films by happenstance. She has been taken note of as one of the bright young things. She has acted with teenybopper heroes like Ajith, Madhavan and Arya.



After successfully completing a major portion of their shooting in USA, the cast and crew of Vettaiyadu Vilaiyadu sans Kamal Haasan returned Chennai a couple of days back. Kamal, Jyothika , director Gowtham Menon among others involved in the movie had been camping in the US for about a month. A couple of songs, action sequences and a major portion of the talkie were shot in the USA. The whole crew sans Kamal Haasan returned, while the actor is expected to stay put for a week there before he returns. Kamal may be staying back to scout for technical know-how in make-up for his next movie Dasavatharam. The rest of the movie would be shot in Chennai, Madurai and its adjoining areas. The movie is currently produced by Seventh Channel Manickam Narayanan and has musical score by Harris Jeyaraj.



The buzz in Kollywood is that director Manirathinam might do a cross-over movie soon. After his Ayudha Ezhuthu, the director has not commenced any project. Manirathinam who is reportedly upset over the recent controversies involving his wife Suhasini Manirathnam, has planned to commence his cross-over film soon. Reports have it Abhishek Bachchan of Yuva fame might play the hero in the movie. Manirathinam's Ayudha Ezhuthu made as Yuva in Hindi did not do well at the box office but won him great admiration. According to reports in Bollywood, Abhishek has given up the chance to act in Sholay remake to be part of Manirathinam's movie. All the best, Abhishek.



Nayantra's career in Tamil makes for interesting reading. Right at the start she has acted with the big names like Rajinikanth and Sarath Kumar. After she has acted with young names like Suriya and Vijay. So what now? The buzz in Kollywood is that she may be considered as one of the heroines for Dasavatharam with Kamal Haasan. Reports had it that she was in fact under consideration for Kamal's Vettaiyadu Vilaiyadu under Gowtham Menon's direction itself. But she couldn't do that film. 'Though the offer to act opposite Kamal Haasan came, she could not take it up as she was already busy with her earlier commitments,' sources say. Now Nayantra is acting in Vallavan, Kalvanin Kadhali, E and Thalaimagan among others. And Dasavatharam may happen.



Noted Tamil director Bala's father passed away at Madurai. The director who is in Chennai busy shooting for his home production Paramasivan, featuring Ajith and directed by P Vasu, rushed to his home town. Bala's father Munusamy (85) was suffering from a prolonged illness and died on Wednesday morning. The director would be in Madurai for the coming weeks and return Chennai only in December.

## The Entertainer



# ARE YOU PAYING TOO MUCH INTEREST ON YOUR DEBTS?

## IS YOUR CASH FLOW BEING SQUEEZED?




Akila Senthil
[Senior Mortgage Consultant, AMP]
Tel:
416-895-4321
Fax:
416-622-5300
E-mail:
akilasenthil@invis.ca


யாருமே நிராகரிக்கப் படமாட்டார்கள் அனைவரும் தகுதியானவர்கள்

உங்கள் பணம் உங்களுக்கே

invis

உங்களுக்காக 45 வங்கிகளிலிருந்து மிகக்குறைந்த வட்டிவீதத்தில் ஈட்டுக்கடன் பெற்றுத்தர உள்ளனர்

**Before Debt Consolidation**

| | | |
|---|---|---|
| Home Value | 300,000 | |
| Current Mortgage | 200,000 | |
| Your Home Equity | 100,000 | |

| Current Loans: | Debts | Payments |
|---|---|---|
| Visa | 20,000 | 1,000 |
| Master Card | 15,000 | 700 |
| Sears/ Leons | 5,000 | 250 |
| Citi Financial | 10,000 | 500 |
| Term Loan | 20,000 | 1,000 |
| Mortgage | 200,000 | 1,200 |
| | 270,000 | 4,650 |

**After Debt Consolidation:**

| New Loans: | Debts | Payments |
|---|---|---|
| Visa | Paid-off | |
| Master Card | Paid-off | |
| Sears/ Leons | Paid-off | |
| Citi Financial | Paid-off | |
| Term Loan | Paid-off | |
| Mortgage | 270,000 | 1,620 |
| | 270,000 | 1,620 |

**Total Gain on Cash Flow $ 3,030**

**Poor Credit?** **Can get mortgage***

**Former Bankruptcies?** **Can get Mortgage***

**New to Canada?** **Can get mortgage***

**Self employed?** **Can get mortgage***

NOW AVAILABLE 100% financing on your home!*

**We offer...**

**Free Consultation**

**No obligation**

**No charge OAC**

**"low mortgage rates are just the beginning..."**

701 Evans Avenue, Suite 600, ON M9C 1A3

*some conditions apply


Raj Rajasri
[CGA. ACMA]
Tel:
416-425-0088
Fax:
905-883-9403
E-mail:
rajasri@sympatico.ca


குறைந்த வட்டிவீதத்தில் ஈட்டுக்கடன் பெற்றுக்கொள்ளவும். கடன்கள் குறித்த இலவச ஆலோசனைகளுக்கும் அனைவரதும் நம்பிக்கைக்கும் பாத்திரமான அகிலாவை அல்லது இராஜியை அழையுங்கள்